# சங்கரதாசு சுவாமிகளின் நாடகப் பாடல்கள்

(சுரதாளக் குறிப்புகளுடன்)

பாடல்களைப் பாடிய நாடக இசைக் கலைஞர்கள்.

கலைமாமணி நகைச்சுவைச் செல்வன் டி.என் சிவதாணு அவர்கள்
கலைமாமணி ஏ.கே. காளீசுவரன் அவர்கள்
கலைமாமணி என்.எம். சுந்தராம்பாள் அவர்கள்.
திரு. கே.டி. இராஜகோபால் அவர்கள்
செல்வி. டி.வி. ஆண்டாள் அவர்கள்.
கலைமாமணி அப்புக்குட்டி பாகவதர் அவர்கள்

சுரதாளக் குறிப்புகள் எழுதியவர்கள்

பேராசிரியர் திருப்பாம்புரம் சோ. சண்முகசுந்தரம் அவர்கள்
முதல்வர், தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி, சென்னை

திரு. பி.எம். சுந்தரம் அவர்கள்
இசையமைப்பாளர், அகில இந்திய வானொலி நிலையம், பாண்டிச்சேரி

பேராசிரியர் ஆர்.வி. கிருஷ்ணன் அவர்கள்
முன்னாள் துணைமுதல்வர், அரசு இசைக் கல்லூரி, சென்னை.

தொகுப்பாசிரியர்கள்.

திரு. து.ஆ. தனபாண்டியன் - பேராசிரியர்
முனைவர் (திருமதி) ஞானா குலேந்திரன் - இணைப் பேராசிரியர்
முனைவர் (திருமதி) பி.எஸ். லோச்சன் (எ) அங்கயற்கண்ணி - விரிவுரையாளர்.




இசைத் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்.

ISBN 81 - 7090 - 129 - 4

தமிழ்பல்கலைக்கழக வெளியீட்டு எண் - 109

திருவள்ளுவர் ஆண்டு - 2020 - புரட்டாசி - செப்டம்பர் 1989

பதிப்பாசிரியர்கள்: திரு. து. ஆ. தனபாண்டியன் - பேராசிரியர்

முனைவர்:திருமதி. ஞானாகுலேந்திரன்
- இணைப்பேராசிரியர்

முனைவர்: திருமதி பி.எஸ். லோச்சன்
(எ) அங்கயற்கண்ணி - விரிவுரையாளர்

நூல்: சங்கரதாசு சுவாமிகளின் நாடகப் பாடல்கள்

பதிப்பு: முதற் பதிப்பு

விலை: உரு. 30.00

அச்சு: சர்மாஸ் சானடோரியம் பிரஸ்
கணேஷ் நகர் புதுக்கோட்டை

# முன்னுரை

19, 20 நூற்றாண்டுகளில் தோன்றிக் கலை வளர்த்த பெரியோர்களுள் நாடகங்களுக்கு பயன்படக்கூடிய வசனங்களோடு நல்ல பல தமிழ்ப் பாடல்களையும் இயற்றி அவற்றைப் பல இனிய இராகங்களில் அமைத்து, இளம் நடிகர்களுக்குப் பாடல் பயிற்சி அளித்து, முத்தமிழுக்கும் அருந்தொண்டாற்றியவர் தவத்திரு சங்கரதாசு சுவாமிகள் ஆவார்கள். சென்ற அறுபது ஆண்டுகளுக்கிடையே சுவாமிகளின் நாடகப் பாடல்களை மேடை நாடகங்களில் பயன்படுத்தாத நடிக நடிகையர் தமிழ் நாடக உலகில் பெரும்பாலும் இல்லை என்றே கூறலாம். அவ்வளவிற்கு சுவாமிகளின் நாடகப் பாடல்கள் பிரபல்யமாக இருந்தன. பாடல்கள் பொருள் எளிமையும், இசை இனிமையும் கொண்டு விளங்கினதால் நடிக நடிகையர் அவைகளை எளிதில் கற்றுக் கொள்ள முடிந்தது. இந்தப் பாடல்களுக்கு சுவாமிகள் சிறந்த வர்ண மெட்டுக்களை இனிய கர்நாடக இசையில் அமைத்துள்ளார்கள். பாடலின் முதல் அடியிலேயே பாடலுக்கு அமைக்கப்பட்ட இராகத்தின் வடிவம் மிளிரும்படியாக அமைத்துள்ளார்கள். சுவாமிகளுக்கு இசையில் இருந்த சிறந்த புலமையை இது புலப்படுத்துகிறது.

அக்காலத்தில் சுவாமிகள் நடத்திவந்த நாடக சபையில் பயிற்சி பெற்ற ஒரு சில நாடக இசைக் கலைஞர்களுக்கே சுவாமிகள் இயற்றிய பாடல்களின் வர்ணமெட்டுக்கள் தெரியும். இக்காலத்தில் உள்ளவர்கள் இவைகளைப் பெரிதும் அறிந்திருக்க இயலாது. எனவே, இந்த அரிய இசை மரபு மறைந்துவிடாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்னும் சீரிய நோக்கோடு, சிறந்த பழம்பெரும் நாடக இசைக் கலைஞர்கள் சிலரைக் கொண்டு இப்பாடல்களைப் பாடச் செய்து, ஒலிப்பதிவு செய்து, சுரப்படுத்தி, அவைகளை ஒரு நூலாக வெளியிடும் பணியினை மேற்கொள்ள வேண்டும் எனக்கருதித் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மாண்புமிகு முனைவர் ச. அகத்தியலிங்கம் அவர்கள் இப்பணியை மேற்கொள்ள என்னைப் பணித்தார்கள். இப்பணியினை நிறைவேற்றுவதற்கு தமிழ்ப் பண்ணிசைப் பாதுகாப்பு அறக்கட்டளையிலிருந்து போதுமான நிதியுதவியையும் வழங்கியுள்ளார்கள். அவர்கள் அளித்த பேருதவியும், ஊக்கமுமே இந்நூல் வெளிவரக் காரணமாயிற்று என்று சொன்னால் அது மிகையாகாது. அவர்களுக்கு என் உளம் நிறைந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சங்கரதாசு சுவாமிகளின் நாடகங்களில் பல ஆண்டுகள் நடித்துப் பாடிப் பயிற்சி பெற்ற நகைச்சுவைச் செல்வன் கலைமாமணி டி.என். சிவதாணு அவர்கள் என் வேண்டுகோளுக்கிணங்க தம் குழுவினருடன் தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்கு வந்து சில நாட்கள் தங்கியிருந்து சுவாமிகள் இயற்றியவற்றுள் 95 பாடல்களைத் தேர்ந்தெடுத்து, அவைகளை மரபு முறையில் பாடியளிப்பதற்குரிய ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தார்கள். அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

திரு டி.என். சிவதாணு அவர்களுடன் வந்து சுவாமிகளின் பாடல்களைப் பாடித்தந்த கலைமாமணி ஏ.கே. காளீசுவரன் (ஆர்மோனியம் பாட்டு) கலைமாமணி அப்புக்குட்டி பாகவதர், திரு கே.டி. ராஜகோபால், கலைமாமணி என்.எம். சுந்தராம்பாள். செல்வி ஆண்டாள் ஆகியோருக்கும் என் நன்றி உரியதாகும்.

நாடகப் பாடல்களுக்கு சுர தானக் குறிப்புகள் எழுதி உதவி புரிந்த தமிழ் நாடு அரசு இசைக் கல்லூரி (சென்னை) முதல்வர் பேராசிரியர் திருப்பாம்புரம் சண்முகசுந்தரம்

அவர்களுக்கும், பாண்டிச்சேரி அனைத்திந்திய வானொலி நிலைய இசை அமைப்பாளர் திரு பி.எம். சுந்தரம் அவர்களுக்கும், தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரி (சென்னை) முன்னாள் துணை முதல்வர் பேராசிரியர் ஆர்.வி. கிருஷ்ணன் அவர்களுக்கும் நான் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

சுவாமிகள் காலத்தில் மக்கள் வழக்கில் இருந்த தோடி, மாயாமாளவகௌளை, சங்கராபரணம், கல்யாணி போன்ற பல சம்பூரண இராகங்களையும், மோகனம், ஆரபி, மத்தியமாவதி போன்ற பல கிளை இராகங்களையும், சுவாமிகள் தமது நாடகப் பாடல்களில் பயன்படுத்தியுள்ளார்கள். இசை வடிவங்களில் ஒன்றான இராகமாலிகையிலும் சுவாமிகள் நாடகப் பாடல்களை அமைத்துள்ளார்கள். (எடுத்துக்காட்டு: பாடல் எண்: 68). அவலச் சுவையைச் சித்திரிப்பதற்குப் பயன்படும் இராகங்களில் முகாரியும் ஒன்றாகும். இந்த மரபைப் பின்பற்றி சுவாமிகள் “மாமா இறந்திரோ” “ஏழைப் பிராமணன் நான்” எனத் தொடங்கும் பாடல்களை முகாரி இராகத்தில் அமைத்துள்ளார்கள். (பாடல் எண்: 35,43). அவ்வாறே “எடுத்து விற்கணை தொடுத்து” எனத் தொடங்கும் பாடல் வீரச்சுவையை வெளிப்படுத்தும் அடாணா இராகத்தில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். (பாடல் எண்: 27).

சுவாமிகள் நாடகப் பாடல்களை இயற்றிய காலத்தில் இந்துஸ்தானி இசையின் தாக்கம் இருந்ததை நாம் காண முடிகிறது. இதற்குச் சான்றாக பியாக், ஜோன்புரி, யமுனாகல்யாணி, அமீர்கல்யாணி, காபி, மாண்ட், சிந்து பைரவி போன்ற இந்துஸ்தானி இசையோடு தொடர்புடைய இராகங்கள் அவரது பாடல்களில் பெருமளவில் பயன்படுத்தப் பெற்றிருப்பதைக் காணலாம்.

இசையில் பெரும்பாலும் நாம் கையாளும் ஆதி, ரூபகம், மிச்ரசாபு, ஏகம் ஆகிய தாளங்களையே சுவாமிகளும் கையாண்டுள்ளார்கள். நாடகக் கதையின் போக்கிற்கு ஏற்பத் தாள வேறுபாடு தேவைப்படும் இடங்களில் கண்ட சாபு போன்ற தாளங்களையும் (பாடல் எண்: 74) திச்ர நடை, சதுச்ர நடை போன்ற பல்வேறு நடைகளையும், விளம்பம், மத்திமம், துரிதம் போன்ற பல்வேறு காலங்களையும் சுவாமிகள் பயன்படுத்தியுள்ளார்கள்.

சுவாமிகள் தேவாரம், திருவாசகம், திருப்புகழ், திருவருட்பா போன்ற பக்திப்பாடல்களின் மெட்டுக்களில் பல நாடகப் பாடல்களை அமைத்துள்ளார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த “மற்றுப் பற்று” எனத் தொடங்கும் தேவார மெட்டில் அமைக்கப்பெற்ற “பிறவியாகிய” என்ற பாடலையும் (பாடல் எண்: 42) “பொன்னார் மேனியனே” எனத் தொடங்கும் தேவார மெட்டில் அமைக்கப் பெற்ற “எங்கும் ஜோதிமயமாகி” என்ற பாடலையும் (பாடல் எண்: 34) மாணிக்கவாசகர் அருளிச்செய்த “முக்தி நெறி அறியாத” எனத் தொடங்கும் திருவாசகப் பாடலின் மெட்டில் அமைக்கப்பட்ட “தங்கள் திருப்பாத மலர்” என்ற பாடலையும் (பாடல் எண்: 49) அருணகிரிநாதர் அருளிச்செய்துள்ள “சரணக் கமலாலயத்தை” எனத் தொடங்கும் திருப்புகழ் மெட்டில் அமைக்கப்பட்டுள்ள “நானோது காதல்மொழி” (பாடல் எண்:74) என்ற பாடலையும் இங்கே உதாரணங்களாகக் கொள்ளலாம்.

மேலும் அண்ணாமலை ரெட்டியார் இயற்றிய காவடிச் சிந்து பாடல் மெட்டுக்களிலும் சுவாமிகள் பல பாடல்களை இயற்றியுள்ளார்கள். “கற்பு மங்கைமார்கள்”, “சுந்தரமதிபோல் முகம்”, “ஆயிரம் நாவைப் படைத்த ஆதிசேடன்” எனத் தொடங்கும் பாடல்கள் முறையே (பாடல் எண்: 87,81,72) இதற்கு உதாரணங்களாகும்.

மேற்கத்திய இசையின் தாக்கமும் சுவாமிகளின் பாடல்களில் பரவலாகக் காணப்படுகிறது. "இங்கிலீஷ் நோட்டு" என்று அழைக்கப்படும் ஐரோப்பிய இசையின் சில எளிய மெட்டுக்களையும் சுவாமிகள் நாடகத்தின் கதைப் போக்கிற்குப் பொருந்த ஆங்காங்கே பயன்படுத்தியுள்ளார்கள். "விண்டிலமும் மண்டிலமும்" "நாடும் இருநாலு திசை" "திவ்ய புருஷர் நீர் யார்" எனத் தொடங்கும் பாடல்களின் (பாடல் எண்: 83,84,85) இசை வடிவங்கள் இங்கிலீஷ் நோட்டுகளாக அமைந்துள்ளமையைக் காணலாம்.

சுவாமிகள் இயற்றிய பழனித் தண்டபாணிப் பதிகத்திலுள்ள பத்துப் பாடல்களும் இந்நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. இப்பாடல்கள் 1902 ஆம் ஆண்டு சுவாமிகளால் பழனியாண்டவர் சந்நிதியில் பாடப் பெற்றவையாகும். "ஞானப்பழத்தைப் பிழிந்து" எனத் தொடங்கும் இப்பதிகத்தின் நான்காவது பாடலைக் காலஞ்சென்ற திருமதி கே.பி. சுந்தராம்பாள் இராகமாலிகை விருத்தமாகப் பாடிப் பிரபல்யப்படுத்தியுள்ளமையை யாவரும் அறிவார்கள். இப்பாடல்களைத் தாளத்தில் அமைத்தும் பாடலாம். இப்பதிகத்தின் ஒரு பாடல் சுரதாளக் குறிப்புகளுடன் இந்நூலில் 94 ஆவது பாடலாகத் தரப்பட்டுள்ளது. சுவாமிகள் தாம் எழுதியுள்ள பாடல்கள் எதிலும் தமது பெயரை முத்திரையாக வைத்ததில்லை. "ஞானப் பழத்தைப் பிழிந்து" எனத் தொடங்கும் பாடலில் மட்டும் கடைசி அடியில் "சங்கரன் கும்பிடும் தண்டபாணித் தெய்வமே" என்று பாடியிருப்பதைக் காணலாம்.

சங்கரதாசு சுவாமிகளின் பாடல்களை ஒலிப்பதிவு செய்யும் பணியிலும், பாடல்களின் சுரதாளக் குறிப்புகளில் காணப்படும் அச்சுப்பிழைகளைத் திருத்தும் பணியிலும் இந்நூல் உருவாக்கம் தொடர்பான மற்றுமுள்ள எல்லாப் பணிகளிலும் என் உடன் அயராது உழைத்துக் குறுகிய காலத்தில் இந்நூலினை வெளிக் கொணர்வதற்கு ஆர்வமுடன் பணியாற்றி உதவி புரிந்த இணைப் பேராசிரியை முனைவர் திருமதி ஞானா குலேந்திரன் அவர்களுக்கும், விரிவுரையாளர் முனைவர் திருமதி பி.எஸ். லோச்சன் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நாடகப் பாடல்களின் சாகித்தியங்களைச் சரிபார்த்து திருத்தங்களைச் செய்து உதவி புரிந்த பாவலரேறு ச. பாலசுந்தரம் அவர்களுக்கு நான் கடமைப்பட்டுள்ளேன்.

சங்கரதாசு சுவாமிகளின் வாழ்க்கைச் சரிதத்தை எழுதுவதற்குத் தேவையான நூல்களையும் கட்டுரைகளையும் தந்து உதவிய தமிழ்ப் பல்கலைக் கழக நாடகத்துறை விரிவுரையாளர் முனைவர் க. இரவீந்திரன் அவர்களுக்கு எனது நன்றி உரியதாகும்.

இப்பாடல்களை ஒலிப்பதிவு செய்வதற்கு வேண்டிய அனுமதியை அளித்த கணிப்பொறி மையப் பேராசிரியர் திரு கா.செ. செல்லமுத்து அவர்களுக்கும் ஒலிப்பதிவு செய்து உதவிய ஒலிப்பதிவு உதவியாளர்கள் திரு சேகர், திரு செல்வம் ஆகியோருக்கும் என் நன்றி உரியதாகும்.

இந்நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டு வெளியிடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்த தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத் துறை துணை இயக்குநர் திரு செ.இரே. செயச்சந்திரன் அவர்களுக்கும், நூலை நன்கு அச்சிட்டு உதவிய புதுக்கோட்டை சர்மா அச்சகத்தாருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

வாழ்க தமிழிசை.

தஞ்சாவூர்
செப்.1989.

து.ஆ. தனபாண்டியன்,
இசைத்துறைத் தலைவர்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

கலைமாமணி
நகைச்சுவை
செல்வன்



டி.என். சிவதாணு
அவர்கள்



பாடல்களைப் பாடிய நாடக இசைக்கலைஞர்கள்

# தவத்திரு சங்கரதாசு சுவாமிகள்.

"தமிழ் நாடகத்தந்தை எனவும், தமிழ் நாடகத் தலைமையாசிரியர்" எனவும் போற்றப்படும் தவத்திரு சங்கரதாசு சுவாமிகள் தென்பாண்டி நாட்டின் துறைமுகங்களில் ஒன்றான தூத்துக்குடியில் தாமோதரக் கணக்குப்பிள்ளை என்னும் தமிழ்ப் புலவரின் அருந்தவப் புதல்வராக 1867-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 7-ஆம் தேதி தோன்றினார். தந்தையார் கல்வி கேள்விகளில் சிறந்த புலவராவார். தூத்துக்குடி நகர மக்கள் அவரை "இராமாயணப் புலவர்" என்ற சிறப்புப் பெயராலேயே அழைத்தனர்[1].

தாமோதரக் கணக்குப்பிள்ளை தம் புதல்வன் சங்கரதாசு கல்வி கேள்விகளில் சிறந்து விளங்க வேண்டுமென்று ஆசித்தார்.

"தந்தை மகற் காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

என்னும் தெய்வப்புலவர் வாக்கின் உண்மையினை நன்குணர்ந்த அவர், தாமே தம் புதல்வனுக்கு ஆரம்பக் கல்வியைக் கற்பித்தார். அக்காலத்தில் அறிஞர்களால் 'புலவரேறு' என்று போற்றப்பட்ட பழனி தண்டபாணி சுவாமிகளிடம் சங்கரதாசு பாடம் கேட்டுத் தமது தமிழ் அறிவை வளர்த்துக் கொண்டார். இவர் தண்டபாணி சுவாமிகளிடம் தமிழ்ப் பாடம் கேட்டபொழுது உடுமலைச்சரபம் முத்துசுவாமி கவிராயரும் தண்டபாணி சுவாமிகளிடம் தமிழ் கற்று வந்தார். ஒரே ஆசிரியரிடம் பாடம் கேட்ட இருவரும் மிகவும் நெருங்கிய நண்பர்களாக இருந்தனர்.

தூத்துக்குடி உப்பு பண்டக சாலையில் சுவாமிகள் சில காலம் கணக்கராகப் பணிபுரிந்தார். தந்தையாரிடமும், தண்டபாணி சுவாமிகளிடமும் தமிழைத் தீரக் கற்றதின் விளைவாக அவர் தமது 16-ஆவது வயதிலேயே பலவகையான இசைப்பாடல்களை இயற்றுவதில் சிறந்து விளங்கினார். கவிதா உள்ளம் கொண்ட அவருக்கு கணக்கர் பணி மனநிறைவை அளிக்கவில்லை. அவர் 1891-ஆம் ஆண்டு தமது 24-வது வயதில் நாடகத் துறையில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். ஆரம்பத்தில் ராமுடு ஐயர், கல்யாணராமய்யர் ஆகியோரின் நாடக சபையில் சுவாமிகள் நாடக நடிப்பில் பயிற்சி பெற்றார்.

நாடக சபைகளில் சங்கரதாசு சுவாமிகள் தொடக்கத்தில் நடிகராகவும் பின்னர் ஆசிரியராகவும் சில ஆண்டுகள் பணியாற்றினார். இரணியன், இராவணன், எமதர்மன், சனீச்வரன் ஆகிய பாத்திரங்களை ஏற்றுக் கொண்டு தமது நடிப்புத் திறனை வெளிப்படுத்தினார். திருவாளர் சாமி நாயுடு அவர்களின் நாடக சபையில் சுவாமிகள் சில காலம் ஆசிரியராகப் பணிபுரிந்தார். அப்போது, சூத்திரதாரராகவும் நடித்து வந்தார். சுவாமிகள் சூத்திரதாரராக வந்து நாடக நுணுக்கங்களைப் பற்றியும், நாடகம் வலியுறுத்தும் நீதிகளைப் பற்றியும் நிகழ்த்தும் விரிவுரையைக் கேட்க மக்கள் ஆவலோடு காத்திருப்பார்கள். வள்ளி வைத்திய நாதைய்யர், அல்லிபரமேசுவரய்யர் ஆகியோர் நடத்தி வந்த நாடக சபைகளில் இவர் சில ஆண்டுகள் ஆசிரியராகப் பணியாற்றினார். பி.எஸ். வேலுநாயர் அவர்களின் சண்முகாநந்த சபையிலும் சுவாமிகள் நெடுங்காலம்

பணிபுரிந்தார். அவர் இவ்வாறு பணியாற்றிய காலத்தில் புதுப்புது நாடகங்களையும் அவற்றுக்கான பாடல்களையும் எழுதி வந்தார். சுவாமிகள் பிறமொழி நாடகங்களையும் தமிழில் ஆக்கிப் புதுமை செய்தார். "மிருச்சகடிகா" என்ற வடமொழி நாடகத்தையும் "ரோமியோ ஜூலியட்" என்ற சேக்சுபியரின் நாடகத்தையும் இவர் தமிழில் ஆக்கித் தந்துள்ளார். சம்பந்த முதலியாரின் "மனோகரா" நாடகத்தில் சுவாமிகளின் பாடல்களே இடம் பெற்றுள்ளன. தொழில் முறை நாடகக் குழுக்களோடு தம்மை ஈடுபடுத்திக் கொண்ட போதிலும் பயின்முறைக் குழுக்களையும் சுவாமிகள் தம்பால் அணைத்துக் கொண்டார் எனக் குறிப்பிடலாம்[2].

1910-வது ஆண்டில் "சமரச சன்மார்க்க நாடகசபை" என்ற பெயரால் சுவாமிகள் ஒரு நாடக சபையைச் சில ஆண்டுகள் நடத்தினார். இந்த நாடகக் குழுவிலேதான் தமிழ் நாடக மேடையின் மங்காத ஒளிவிளக்காகத் திகழ்ந்த எஸ்.ஜி. கிட்டப்பாவும், அவரது சகோதரர் எஸ்.ஜி. காசி ஐயரும் பயிற்சி பெற்றனர். இசைப் புலவராக விளங்கிய மதுரை மாரியப்ப சுவாமிகளும் இந்த நாடகக் குழுவில் பணியாற்றியவரே.

சகந்நாதைய்யர் அவர்கள் நடத்திய பாலமீன ரஞ்சனி சங்கீத சபையில் சுவாமிகள் நாடக ஆசிரியராகப் பணியாற்றினார். திருவாளர்கள் பி.டி. சம்பந்தம், எம்.எஸ் முத்துகிருஷ்ணன், டி.பி. பொன்னுசாமி பிள்ளை, எம்.வி. மணி, டி. பாலசுப்ரமணியம், கே. சாரங்கபாணி, எஸ்.வி. வெங்கட்ராமன், நவாப் டி.எஸ். இராஜ மாணிக்கம் பிள்ளை, எம்.கே. இராதா முதலிய எண்ணிறந்த நடிகர்கள் இந்த சபையில் பயிற்சி பெற்றவர்கள் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

கும்பகோணம் தாப்பா வெங்கடாசலம் செட்டியார் சிறு குழந்தைகளைக் கொண்டு நடத்திக் காட்டிய நலுங்கு நிகழ்ச்சி, குழந்தைகளைக் கொண்டு நாடகம் நடத்தும் முயற்சிக்கு முன்னோடியாக அமைந்தது. இதுவே பாலர்சபை முறைக்கும் தூண்டுதலாகி நின்றது. இதனை வடிவமாக்கிச் செயல்பட வைத்தவர் சங்கரதாசு சுவாமிகளே ஆவார்[3]

திரு. சகந்நாதைய்யர் அவர்களுடன் ஏற்பட்ட மனத்தாங்கலின் விளைவாகச் சுவாமிகள் சில நண்பர்களின் கூட்டுறவோடு 1918-ஆம் ஆண்டில் மதுரையில் "தத்துவ மீனலோசனி வித்துவ பாலசபை" என்ற பெயரில் அமைந்த பாலர் நாடக சபையைத் தோற்றுவித்து அதன் ஆசிரியராகப் பணியாற்றினார். இந்தக் குழுவில்தான் டி.கே.எஸ். சகோதரர்கள் சேர்க்கப்பட்டனர். இப்பாலர் சபை முழுவதும் சிறுவர்களையே நடிகர்களாகக் கொண்டு விளங்கியது.

செல்வமும், செல்வாக்கும் பெரிய நடிகர்களிடையே கட்டுப்பாடின்மையை ஏற்படுத்தின. தாங்கள் ஏற்றுள்ள பாத்திரங்களுக்குரிய வரம்புகளை மீறிச் சக நடிகர்களை மேடையிலே இழித்தும், பழித்தும், பேசிக் கைதட்டல் பெறுவதும் சற்றுத்திறமை குறைந்தவர்களை அவமானத்துக் குள்ளாக்குவதும் அன்றாட நிகழ்ச்சிகளாக அக்கால நாடக மேடையில் நிகழ்ந்தன[4]. இவ்வாறு பெரியவர்களால் மதிப்பிழந்த நாடக மேடையில் புதிய ஒளி ஏற்படுத்த வேண்டி உருவாக்கப்பட்ட நாடக முறையே 'பாலர் நாடக சபை' முறையாகும். பெரியவர்களுக்குப் பதிலாக சிறுவர்களைச் சேர்த்துக் கொண்டு பயிற்றுவித்து நாடகம் நடத்தப்பட்டமை ஒரு சோதனை முறையென்றே சொல்ல வேண்டும்.

வயது வந்தவர்கள் பங்குப்பெறற வேடங்களில் அவர்களுக்குப் பதிலாக இளம் சிறுவர்களை அறிமுகப்படுத்தி நாடக மேடையில் ஒழுக்கத்தையும், கட்டுப்பாட்டையும் கொண்டு வந்தவர் சங்கரதாசு சுவாமிகள். இவ்வாறு தொழில் முறையிலேயே இயங்கி வந்த நாடகக் குழுக்களையெல்லாம் ஒழுங்கு படுத்தி, நடிகர்கள் தெய்வத்திடமும், தேசத்திடமும், அன்போடும், பக்தியோடும் வாழவேண்டும் என்று கற்றுக் கொடுத்தவர் சங்கரதாசு சுவாமிகள் ஆவார்[5].

பாலர் நாடக சபை முறையில் நடிப்புப் பயிற்சியோடு ஒழுக்கம், கட்டுப்பாடு, கடுமையான சட்டத்திட்டங்கள் முதலியன பேணப்பட்டன. சிறுவர்களுக்குப் பயிற்சியளிக்க சுவாமிகள் வகுத்துக் கொடுத்த "பால பாடம்" என்ற பயிற்சி முறை கையாளப்பட்டது. சுவாமிகள் சிறுவர்களுக்குப் பயன்படும் வகையில் எல்லா நாடகங்களுக்கும் உரிய பாடல்களையும், உரையாடல்களையும் முறையாக எழுதினார். நவரசமும் ததும்ப நடிப்புச் சுவை குன்றாமல், அந்தந்தக் கட்டத்திற்கு ஏற்றவாறு பாடல்களை அமைக்கும் அதிசயத் திறமை சுவாமிகளிடமிருந்தது.[6] எனவே, சிறுவர்களின் நடிப்புத்திறைமைக்கு மெருகூட்டும் வண்ணம் அவை அமைந்திருந்தன. பாலர் நாடக சபைமூலம் தமிழ்நாடக உலகில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கினவர் சுவாமிகள்.

தி.க. சண்முகம் சகோதரர்கள் சிறுவயதிலேயே தத்துவ மீன லோசனி வித்துவ பாலசபையில் நடிகர்களாகச் சேர்ந்து பயிற்சி பெற்றனர். தாம் சுவாமிகளிடம் பெற்ற நடிப்பு மற்றும் இசைப் பயிற்சியைப் பற்றி திரு. அவ்வை தி.க. சண்முகம் தாம் இயற்றிய "எனது நாடக வாழ்க்கை" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். சுவாமிகள் தாமே நடிப்புச் சொல்லிக் கொடுப்பதைத் தாம் பலமுறை பார்த்திருப்பதாகவும் எமதர்மன், இரணியன், கடோற்கஜன் முதலிய வேடங்களுக்கு அவரே நடிப்புப் பயிற்சி அளிப்பாரென்றும், கம்பீரமான அவரது குரல் வெங்கல நாதம் போல் ஒலித்ததென்றும் திரு. அவ்வை சண்முகம் குறிப்பிட்டுள்ளார்[7].

ஒரே நாளில் ஒரு நாடகம் முழுவதையும் கற்பனையாக எழுதி முடிக்கும் ஆற்றல் சுவாமிகளுக்கு இருந்தது. தி.க. சண்முகம் கதாநாயகனாக நடிப்பதற்கு ஏற்றபடி ஒரு நாடகம் எழுத வேண்டுமென்று சுவாமிகள் தீர்மானித்தார். ஒரு நாள் மாலை சுவாமிகள் புத்தகக் கடைக்குச் சென்றார். "அபிமன்யு சுந்தரி" அம்மானைப் பாடல் பிரதி ஒன்று வாங்கி வந்தார். இரவு சாப்பாட்டுக்குப் பிறகு அரிக்கேன் விளக்கை வைத்துக்கொண்டு எழுத ஆரம்பித்தார். அன்றிரவிலேயே அபிமன்யு நாடகம் மங்களப்பாட்டுடன் முடித்து வைக்கப்பட்டது. சங்கரதாசு சுவாமிகள் ஒரே நாள் இரவில் நூற்றுக்கணக்கான பாடல்கள், உரையாடல்களுடன் அடித்தல், திருத்தல் இல்லாமல் எழுதியிருந்த 'அபிமன்யு சுந்தரி' நாடகத்தைக் கண்டு எல்லோரும் அதிசயப்பட்டார்கள் என்றும், 'தமக்காக எழுதப்பட்ட இந்த நாடகத்தை எண்ணி எண்ணி பெருமைப்படுகிறேன், பெருமிதப்படுகிறேன்' என அவ்வை சண்முகம் நன்றியோடு சுவாமிகளை தமது நூலில் நினைவு கூர்கின்றார்[8].

அந்நாளில் நாடக உலகில் சுவாமிகள் என்றாலே அது சங்கரதாசு சுவாமிகள் ஒருவரைத்தான் குறிக்கும். சுவாமிகள் காலத்தில் இருந்த மிகப் பெரிய புலவர்களும் நாடக ஆசிரியர்களுமான உடுமலைச் சரபம் முத்துசாமிக் கவிராயர், சித்திரகவி சுப்பராய

முதலியார், ஏகை சிவசண்முகம் பிள்ளை, குடந்தை வீராசாமி வாத்தியார் முதலியோர் யாவரும் சுவாமிகளின் புலமைக்குத் தலை வணங்கிப் பாராட்டினார்கள்.

சுவாமிகள் பல நாடகங்களை எழுதி உருவாக்கினார். நாடகங்கள் உரைநடையும் பாடலும் கலந்து வரும் அமைப்பில் எழுதப்பட்டன. நாடகங்கள் மூலம் மக்களுக்கு நன்மை பயக்கும் கருத்துக்களைச் சொல்வதே நோக்கமாகக் கொண்டதால் புராண, இதிகாச, நாட்டுப் புறக்கதைகளே சுவாமிகளின் நாடகங்களில் கதை மூலங்கள் ஆயின[9] சீமந்தனி, மணிமேகலை, லவகுசா, சத்தியவான் சாவித்திரி, அபிமன்யு சுந்தரி, வள்ளித் திருமணம், பவளக் கொடி, சுலோச்சனா சதி, பிரபுலிங்க லீலை, சிறுத்தொண்டர், பிரகலாதா, கோவலன், சதி அநுசுயா, அல்லி அர்ச்சுனா, பார்வதி கல்யாணம் போன்றவை சுவாமிகளின் குறிப்பிடத்தக்க நாடகங்களாகும்.

இவைகளில் கைப்பிரதிகளாய் இருந்த சில நாடகங்களைத் தமிழ்நாடு சங்கீத நாடக சங்கத்தின் நிதி உதவியுடன் சங்கரதாசு சுவாமிகள் நினைவு மன்றச் செயலாளர் நகைச் சுவைச் செல்வன், கலைமாமணி டி.என். சிவதாணு அவர்கள் நூல்களாக வெளியிட்டு அரிய சேவை புரிந்துள்ளார்.

1922-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 13-ஆம் தேதி திங்கட் கிழமை பாண்டிச்சேரி மாநகரில் தமிழ் நாடக உலகின் தலைமை ஆசிரியராகவும் நாடக ஆசிரியர்களுக்கெல்லாம் பேராசிரியராகவும், விளங்கிய தவத்திரு சங்கரதாசு சுவாமிகள் தமது பருஉடலை நீக்கிப் புகழ் உடம்பை எய்தினார். நாடகக்கலை உலகம் ஓர் ஒப்பற்ற மாமேதையை இழந்து கண்ணீர் வடித்தது. தவத்திரு சங்கரதாசு சுவாமிகள் எழுதியுள்ள நாடகங்களை கலைஞர்கள் போற்றிப் பாதுகாப்பதுதான் நாடக உலகம் அவருக்குச் செலுத்தும் சிறந்த அஞ்சலியாகும்.

## அடிக்குறிப்புகள்:-

1. அவ்வை தி.க. சண்முகம் 'அபிமன்யு சுந்தரி' என்னும் நாடக நூலிற்கு அளித்துள்ள அணிந்துரைக் கட்டுரை.
2. முனைவர் க. இரவீந்திரன் இயற்றிய 'தி.க. சண்முகம் நாடகங்கள்' என்னும் நூல் பக்கம்-20
3. முனைவர் க. இரவீந்திரன் எழுதிய 'பாலர் சபை நாடகங்கள்' என்னும் தலைப்பிலான ஆய்வு நூல். தமிழ் பல்கலைக் கழகத்தில் இந்நூல் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.
4. திரு. கு.சா. கிருஷ்ணமூர்த்தி எழுதிய 'தமிழ் நாடக வரலாறு' பக்கம் - 102
5. எஸ்.வி. சகச்சரநாமம் இயற்றிய "தமிழ் நாடகக் கலையின் வரலாறு" பக்கம் - 76.
6. அவ்வை தி.க. சண்முகம் இயற்றிய "நாடகக் கலை" என்னும் நூல் பக்கம் - 40
7. அவ்வை தி.க. சண்முகம் இயற்றிய 'எனது நாடக வாழ்க்கை' என்னும் நூல் பக்கம் - 41.
8. அவ்வை சண்முகம் இயற்றிய "எனது நாடக வாழ்க்கை" பக்கம் - 42.
9. முனைவர் க. இரவீந்திரன் சங்கரதாசு சுவாமிகள் பற்றி எழுதிய கட்டுரை



# தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.


துணைவேந்தர்
முனைவர் ச. அகத்தியலிங்கம்
எம்.ஏ.,பி.எச்.டி.(கேரளா)
பி.எச்.டி. (இந்தியானா,
அமெரிக்கா)

தொலைபேசி:
அலுவலகம் 20040
இல்லம்: 21741
தொலைவரி: வளர் தமிழ்


## அணிந்துரை

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் நிறுவப்பட்டுள்ள தமிழ்ப் பண்ணிசைப் பாதுகாப்பு அறக்கட்டளையிலிருந்து பெற்ற நிதி உதவியில் சங்கரதாசு சுவாமிகளின் நாடகப் பாடல்கள் என்ற இந்நூல் வெளியிடப்படுகிறது.

சங்கரதாசு சுவாமிகள் தாம் இயற்றியுள்ள நாடகப் பாடல்களுக்குக் கருநாடக இசையில் இனிய வர்ணமெட்டுக்களை அமைத்துள்ளார். தமிழகத்து நாடக மேடை இசைக் கலைஞர்களில் ஒரு சிலரே சுவாமிகளின் பாடல்களை அவர் அமைத்த வர்ணமெட்டுகளில் பாடி வருகின்றனர். வருங்காலத்தில் இந்த வர்ண மெட்டுக்கள் படிப்படியாக அழிந்து போகும் நிலை ஏற்படலாம். இந்த மரபு பாதுகாக்கப்பட வேண்டும் என்ற நோக்கோடு இந்நூல் வெளியிடப்படுகிறது.

சுவாமிகளிடம் நேரில் பயிற்சி பெற்ற நகைச்சுவை நடிகர் திரு டி.என். சிவதாணு அவர்களும் அவர்களுடைய குழுவைச்சேர்ந்த பழம்பெரும் நாடக இசைக் கலைஞர்களும் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு வந்து இப்பாடல்களைப் பாடி அளித்தமை பாராட்டுதற்குரியது.

நாடக நடிகர்களுக்கும் இசைக் கலைஞர்களுக்கும் பயன்பட வேண்டும் என்ற நோக்கோடு இந்நூல் குறைந்த விலையில் வெளியிடப்படுகிறது.

இந்நூலைச் சிறந்த முறையில் வெளியிடுவதற்கு உரிய அனைத்துப் பணிகளையும் மேற்கொண்ட இசைத்துறையினருக்கு என் உளம் நிறைந்த பாராட்டுக்கள்.

தஞ்சாவூர்
செப்'89.

ச.அகத்தியலிங்கம்,
துணைவேந்தர்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்-1.

# சங்கரதாசு சுவாமிகளின் நாடகப் பாடல்கள்.

## பொருளடக்கம்

# சங்கரதாசு சுவாமிகளின் நாடகப் பாடல்கள்

## பக்திப் பாடல்கள்

1

இராகம் : தோடி
[8-ஆவது மேளகர்த்தா இராகம்]

தாளம் : ரூபகம்
0/4

ஆரோசை : ச ரி க ம ப த நி ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

## பல்லவி

| | |
|---|---|
| / த நி ச் ரி ச்ா | /, நி ரீ ச் தா, நி நீ |
| / மூல மந் . திர | / . மோ . ன. நற் . பொரு |
| / ச்ா ; ச் நி தா | / த நி ச்ா ச்ா ச் நி த ப மா |
| / ளே . உ . யர் | / மூஷிக மே . . . றும் |

## அனுபல்லவி

| | |
|---|---|
| / தா, த க் ரி ச்ா | / ச் ச் ச் ச் நி த நி ச்ா |
| / ஆ.ல முண்டவன் | / அம்பிகை கொண்.டா.டும் |
| / ச்ா ச் ச் நீ நி நி தா தப | / நீ நி நி தா த த பா ப ப |
| / அன்புறு மைந்தனெனும்படி | / வந்துபொ ருந்திவி ளங்கிய |
| / ச்ா ச் ச் நீ நி நி தா தப | / நீ நி நி தா த த பா ப ப |
| / முத்தமிழ் வர்க்கமு றைப்படி | / கற்கநி னைத்தஎ னக்கருள் |

## சரணம்

| | |
|---|---|
| /, பா ப ப ப க ம | / பா ப த நீ ச்ா நி த பா |
| / . புண்ணியம் தாழ்ந்திட்ட | / பொல்லாக். கலி கா.லம் |
| /, பாதநி ச்ச்ச் | / தநிச்ா ச்நிதா நீச்ா |
| / . போதனை யைத் தள்ளிப் | / போ.டும் இந் த ஞாலம் |
| /, தா ப த க் ரி ரீ ச்ா | / ச்ா ச்ரு ரிச் நி தா நிச் |
| / . கண்ணியம் எண்.ணாது | / காணும் .. அ.லங் கோலம் |
| / ச்ச்ச் ச்ச்ச் ரிச்நிதபத | / நிநிநி நிநிநி தநிதபதத |
| / கதிபெ றநின திருபதமலர் | / துதிபுரி எனை யருளிதுதி |

இராகம் : மோகனம் தாளம் : ரூபகம்

[28-ஆவது மேளகர்த்தாவாகிய அரிகாம்போதியில் பிறந்தது.] 0/4

ஆரோசை : ச ரி க ப த ச்
அமரோசை: ச் த ப க ரி ச

பல்லவி

| | |
|---|---|
| / க க ப கா ரீ ச த | / சா ; த த |
| / தும்பிக்கைத் தேவன் து. | / ணை . இந்தத் |
| / தச் ச் த ச் ச் | / த ச் த ப க ரி கா |
| / தொல்லுலகில் வேறு | /இல்லையென்று கூறு |

அனுபல்லவி

| | |
|---|---|
| / த தா த தா த த த் | / ப த ச்ா ச் ச் ச் ச் |
| / நம்பித்திரு வடி | / நா.ளும் துதிப்போர்க்கு |
| / த ச் ச் ச் ச் த ச் தா பா | / கக தத பப கபகரிசா |
| / நல முடன் அருள் தரும்நா தன் | / புலன்வெலமதிபுகல்போ. தன் |

சரணம்

| | |
|---|---|
| / க க க க ரி ரிக | பாபா க ப ப ப |
| / ஔவைக்குக் கயி | லாயத்தைக் . காட்டினோன் |
| / த த த த ச் த பா | / ப பதச்ா தா ச்ா |
| / அன்புத்தம்பி குகனுக் | / குப் பெண்.கூட்டினோன் |
| / தா க் ரி க்ா ; , | / தா ரி ச் ரீ ; , |
| / அற்பு. தன் . . | / கற்பி . தன் . . |
| / ச்ா ச் த ச்ா ; , | / ; ; ; ; ; ; |
| / பொற்ப. தன் . . | / . . . . . . |
| / ச்ா ச் ச் ச் ச் தா ச் த த ப | / க க த ப ப ப க ப க ரி ச ரி |
| / அண்டி நின்றவர் துன்ப மென்பது | / அகன்றுசென்றிட நன்.குவந்தருள் |

3

இராகம் : பேகட	தாளம் : மிச்ரசாபு

[29-ஆவது மேளகர்த்தாவாகிய தீரசங்கராபரணத்தில் பிறந்தது.] /300

ஆரோசை : ச க ரி க ம ப த ப ச்ா
அமரோசை : ச் நீ த ப மா க ரி ச

## பல்லவி

| | |
|---|---|
| / க ம ப – ப ப ப ப | / பாப – ப ம தா |
| / சிவனு மைசு தவி | / நாய க . நா |
| / பா ; , ப த | / நீ , தா , – பமகம ரீ |
| / மா . . தொண். | / டர்.கள். நே . . . மா |
| / க க க – க ம த ப | / க க க – க க கமதப |
| / தினமுன் – னடிபணி | / எனைநீ விட லா . . . |
| / கரிசா ;., த ரி | / நீ த – ப ம க ம ரீ |
| / மா . . . . இது | / ஞாய மா . . . மோ |

## அனுபல்லவி

| | |
|---|---|
| / ப ப ப – த ப ச் ச் | / ச் ச் ச் – ச்ா ச்ா |
| / கவன மதகரி | / வதன தேவா |
| / த த ரி – ச் ச் ச் ரி | / தா ச் – தா பா |
| / ககனர் பணியும | / கானு பாவா |
| / த த ரி – ச் ச் ச் ரி | / நீ ச் – தா பா |
| / புவன வுயிர்கட்கா | / தார ஜீவா |
| / ப த ச் – தா ப ப | / பாம – கா ம ரி |
| / பூ . ர ண கண | / நாத னேவா . |

## சரணம்

| | |
|---|---|
| / க ம ப – ப ப ப ப | / ப ப ப – ப ம தா |
| / தவமு னிவரர்கள் | / அறிவு நிலை யூ |
| / பா ;, ப த | / நீ , தா , – ப ம க ம ரீ |
| / கா . . வல். | / ல .பை . பா . . . கா |

/ க க ரி – க ம த ப
/ ச த ம கனின் மலர்
/ கரிசா ; , த ரீ
/ கா . . . . ஜெய
/ க ம ப – த ப ச் ச்
/ பவவினையிலுழல்
/ த த ரி – ச் ச் ச் ரி
/ பதறி மனம் அனல்
/ த த ரி – ச் ச் ச் ரி
/ கவலை யுடன் உரு
/ ப த ச் – நீ த ப
/ காரணா அருள்

/ க க ரி – க ம த ப
/ வணஞ்செய் நிலையூ .
/ நி நி த – பா பா
/ விஜய வாகா
/ ச் ச் ச் – ச்ா ச்ா
/ பிறவி யாலே
/ நி நி ச் – தா பா
/ மெழுகு போ லே
/ நி நி ச் – தா பா
/ குது மென் மேலே
/ பா ம – ப ம க ம ரீ
/ வாய்என்–பா . . . லே

குறிப்பு : பேகட இராகம், பியாகடை என்றும் அழைக்கப்படுகிறது. இந்த இராகத்தின் ஆரோசை ச க ரி க ம ப த நீ த ப ச்ா என்றும் வருவதுண்டு.

4

இராகம் : மாயாமாளவகௌளை — தாளம் : ஆதி

[15-ஆவது மேளகர்த்தா இராகம்] — /4 0 0

ஆரோசை : ச ரி க ம ப த நி ச்

அமரோசை : ச் நி த ப ம க ரி ச

## பல்லவி

| | | |
|---|---|---|
| /, பபாமமா மகபம கரிரீ | / ரீ சா | / ; சச |
| / . கல் . விக் . கு . ரிய க. லை | / வாணி | / . உன்றன் |
| /, சரீகமா பப தபதா | /, பதாபமா | / மகபம கரிசா |
| / . கழலடி பணி கி.றோம் | / . கருணைசெய் | / பே ... ணி .. |

## அனுபல்லவி

| | | |
|---|---|---|
| /, பா, ப பா பபபப | /, பதாபபா | / பா தநிதா |
| / . செல்.வமுன்னருளின்றி | / . செகத்தினர்க் | / கே து .. |
| /, பதாபமா மம பமகா | / கா பதாபமா | / பா, த நிநிதா |
| / . திக்கும்,அ றிவில் லார்க்.. | / குன் நிலைதெரி | / யா .. து .. |
| /, பதாபதா நிச்ச்ச் | /, ச்சாச்சா | / தநிச்நி தாபா |
| / . பல்.வகை புகழ் மறை | / .பகர்மொழி | / மா . . . து . |
| /, மா,மமா பா,ப தபதா | /, பதாபமா | / மகபம கரிகரி |
| / . பா.ரதி நீ . கடைக்கண் | / . பா.ரெங்கள் | / மீ ... து ... |
| / சா | | |
| / . | | |

## சரணங்கள்

## (அனுபல்லவி போலவே)

1. கும்பன் நக்கீரன் ஞான சம்பந்தனோடும்
குலவிய நால்வர் ஒட்டக் கூத்தன் சொல்நாடும்
கம்பன் ஔவையார் காள மேகமும் பாடும்
கவிவலி உனதருள் ககனர் கொண்டாடும்.

2. இயலிசை நாடகம் எனுந்தமிழ் விரிவாய்
இருப்பதெவ்விதம் கற்போம் என்பதைத் தெரிவாய்
தயவுசெய்துயர் வித்தை தந்தருள் புரிவாய்
தருணமிதுவே உன்கண் அருள்மழை சொரிவாய்.

## 5

இராகம் : ஜோன்புரி
[20-ஆவது மேளகர்த்தாவாகிய நடபைரவியில் பிறந்தது.]

தாளம் : ஏகம்
/ 4
(அதீத எடுப்பு)

ஆரோசை : ச ரி ம ப த நி ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

### பல்லவி

/ ; ச் ச்
/ வெள்ளை

/ நிச்ா தா, ம / ப நி த ப / மபம கரிச சா
/ வா.ணி. வித் / தைக்குரிய / ரா . . ணி . . நல் .
/ ரீ, மா, ப / ப த் தா / பா ;
/ வே.த. புத் / த க பா / ணி .

### அனுபல்லவி

/ ; பதமா
/ . இந்த

/ பா , நீ , ச்ரி / க்ா, ர், நிர் / ரிக்ார், மம
/ வே .ளை. எமை / யா. ள. வேணும் / தா.யே. உனை
(திச்ரகதி) / பாநீநிச் / ரிக்ரீச்ரி ரீ, ரீரி
/ வேண்டினோம்கண் / பார்க்.க வேணும் / நீ.யே.விற்
/ ரிக்ரிச்ாநி / ச்ா ச்ா, ரி / ரி க் ரி ச்ா நி
/ பனி.வாக்கு / தேவி . மேன் / மை.யான சஞ்
/ ச்ா ச்ா ;
/ ஜீ . வி .

(சதுச்ரகதி) / ச்ச்ரிச் நீ / நிநிச்நி தா / ததநித பா/ பபதப மா//
/ வினயமுறு / தமிழ் நடன / வகையருள/ இது தருணம்

**சரணம்**

/ , தநீதபா / மாகா ரீகரி / , தநீதபா / மாபம கரிகச
/ . தே.வரும் / மகிழ் இன்ற. / .செந் தமிழ் / நா.. ட . கம்
/ , ரிமம / பச் நித / பா , ம
/ . சீர்கெட்டுப் / போச் . சு தம் / மா . உன்
/ பா , நீ, ச்ரி / ரி க்ா ரீ, நிரி / ரி க்ா ரீ, ,
/ சித். தம்.மெலி / வா . க . வாடு / இன் . றோம் .
/ பா , நீ , ச்ரி / ரி க்ா ர்ீ , நிர்ி / ர்ி க்ா ர்ீ , ரி
/ செம்.மை . செய்து / தா.ராய்வேண்டி / நின்றோம் . தி
/ ரி க் ர்ி நி / ச்ா , ச்ா , ர்ீ / ர்ிக்ர்ிநி / ச்ா, ச்ா, ,
/ னமும் புகழ் / இன்.றோம்.சே / வித்து மகிழ் / இன் .றோம். .
/ ச்ச்ரிச் நீ / நிநிச்நி தா / ததநித பா / பபதப மா
/ திருவடி மா / மலரையலால் / ஒருதுணையே / தருள் புரிவாய்

குறிப்பு : இந்த இராகம் இந்துஸ்தானி இசையில் ஜீவன்புரி என்று வழங்கபபடுகிறது. சரிமப - நிதப - தமப - கரிமப - ச்நிதபமபகரிச போன்ற சரக்கோர்வைகள் இந்த இராகத்தில் பயன்படுத்தப்படுகின்றன-

## 6

இராகம் : சங்கராபரணம் | தாளம் : மிச்ரசாபு
[29-ஆவது மேளகர்த்தா இராகம்] | / 3 0 0

ஆரோசை : ச ரி க ம ப த நி ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

### பல்லவி

| | | |
|---|---|---|
| / ; கம-பா பமகம | / பா , பா,-மபதநி | / ச்ர , - ; ச்ா |
| / . கருப் பு கா . . . | / மல் . கண்-பா. ரய் | / யா . - . ஏ |
| / ச்நிதாபா-பமகா மரி | / ; , -ககமத பா | / பமகா காமதபா மகரீ |
| / மை..நான்-கொண்..ட | / , , கவலை . முற் | / றிலும் தீ... ரய்.. |
| / சா ; ; , | // | |
| / யா . . . | // | |

### அனுபல்லவி

| | |
|---|---|
| / ; ச்ச்-ச்ாச்ா | / ச்நிதப தா, நீ, ச்ா |
| / . திருப்-பரங் | / கி. ரி. வே . . . லா |
| / ச்ரீ-ச்நிதா பா | / பமதபா, பா மகமரி |
| / சிவ னா . . ர | / ரு.ளும் . பா லா ... |

### சரணம்

| | |
|---|---|
| / ; ப-பாபா | / பமதபா , - பமகா மகமரி |
| / . எத் தனை | / யோ . . . பி . ற வி . . . |
| / ; கம-பாபம | / பபா-பாபா |
| / . எடுத் தெடுத் . | / துவந்-திட்டேன் |
| / ; கம-பாபா | / கமதபா, - பமகா மரி |
| / . எள் ளள | / வி . லும் . . புத் . . தி . |

| | |
|---|---|
| /; கம - பா பா | /கமபதா, - பா பா |
| /; இல். லாமல் | / ம . தி . . கெட்டேன் |
| /; பபமகா, மப | / தா , - நீ சா |
| / . சத். . த . முத | / லைம். பு லம் |
| /; ச் ரீ சா | / ச்ச்நிபா ,-தநிசா |
| / . சார மென் | / றிச்.சைப். - பட்டேன் |
| /; ச்ச்-ரீசா | / ச்நிபா ;-தநிசா |
| / . சர வண | / ப . வ . னே. உன் |
| / ச்ார்ரி-ச்நிதா பா | / பா , - மகமரி |
| / தா . ளி.ணையை | / கும். பிட்டேன் |

(மற்ற சரணங்களும் இதேபோல)

1. அருணகிரி புகழில் அனுதினம் பழகுற்றேன்
ஆனாலும் ஞானமின்றி ஐயையோ மதியற்றேன்
ஒருமை நிலையில் நில்லாத உள்ளத்தால் இடர்பெற்றேன்
உன்பாதம் துணையாமென் றுறுதியாய் எண்ணமுற்றேன்.

2. ஊமைக்கருள் சுரந்தஉன் மகிமையைக் கேட்டு
ஒரு பிழையின்றிப் பாடல் உரைத்திடும் நிலைவேட்டு
நேமப்படி உன் கோயில் நித்தம் கும்பிடு போட்டு
நிற்கின்றேன் நானடிமை நீயுன்னுடனே கூட்டு.

## 7

இராகம் : பூர்விகல்யாணி — தாளம் : ருபகம்
[53-ஆவது மேளகர்த்தாவாகிய கமனப்பிரியாவில் பிறந்தது] — 0 / 4

ஆரோசை : ச ரி க ம ப த ப ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

### பல்லவி

| | |
|---|---|
| / ப ம க ரி ச ச | / ச ரி கா , ப |
| / கொஞ்சமேனும் என்சொல் | / காதுக்கு . நீ |
| / பா , பா, ப ப ப ப | / த த பா ம்*க ரி க |
| / கொள்.ளா .திருப் பதும் | / ஏ.துக் கு . . . |

### அனுபல்லவி

| | |
|---|---|
| / , பதாபச்ா ச் ச் | / ச் ச் ச் ச் ச் ச் |
| / . நஞ்சமுண்ட நீல | / கண்டனுக் குமன்று |
| / சா , ச் நிநிதா தப | / கதாப பமகரி ரிக |
| / ஞா. ன மோ. தும் குரு | / நா. தா கு. கா இன்று |

### சரணம்.

| | |
|---|---|
| / , ப ப ப ப ப | / ப ப ம க - ரி க |
| / . கொண்ட பூஜையை | / விட்டேனென்றோ - என் மேல் |
| / , ப ப ப மககா | / ரி க ம ப பா |
| / . கோபமுற் றா . . | / யிதுவும் நன்றோ |
| / , பதாபச்ா ச் ச் | / ச் ச் ச் ச் ரி ச் |
| / . பண்டுசெய்த வினை | / பா. வ நிலை தானோ |
| / ச் ச் ச்நிதா ப ா | / பதாபபா பமகரிகா |
| / பாலன் பி. ழை யைப் | / பொறுக்கா. த. து மேனோ |

(மற்றசரணங்களும் இதேபோல)

தாசன் குற்றத்தை முற்றுந்தள்ளு - இணைத்
தாளிலே என்னைச் சேர்த்துக்கொள்ளு
ஆசா பாசத்தால் அவதியடைந்தேனே
ஆறுமுகா உன்னை நம்பியிருந்தேனே

குறிப்பு: கமனப்ரியா மேளகர்த்தா இராகம் சில நூல்களில் கமனச்ரம, என்றும் கமகக்ரியா என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

8

இராகம் : பியாக் தாளம் : ஆதி

(29 ஆவது மேளகர்த்தாவாகிய தீரசங்கராபரணத்தில் பிறந்தது) /4 0 0

ஆரோசை : ச க ம ப நி த ச்

அமரோசை : ச் நி த ப ம க ரி ச

பல்லவி

| | | |
|---|---|---|
| /, ச்ச்ாச்ச்ா ச்ச்ா நி தபதா | /, நீ‚ச்நிதா | / பாமக பா |
| /. தமிழேசி றந். தெதெ. ன | /. உனது நா | / மம் விளங்க |
| /, பதாபமா கரிரிப | /, கமாரிரீ | /\ச்ா ; |
| /. சாற். றுமந் தப் பொ ருளை | /. யா. ரறி | /வார் |

சரணம்

| | | |
|---|---|---|
| /, பபாபபா நிநிச்ச் | /, ச்ா,ச்ச்ா | /ச்ச்ச்ரி |
| /. அமிழ்தினிற். சிறந்தது | /. ஆ . ரியத் | / துயர்ந்தது |
| /, ததாததா தாதநிச்ா | /, நிச்ாநிதா | / பாநித பப |
| /. அகத்திய னாற் சி. வ | /. னிடத்தினில் | / உணர்ந். தது |
| /, ச்ச்ாச்ச்ா ச்ாச்நி பத | /, தச்ாச்ச்ா | / ச்நிதா நிதபா |
| /. அடி சீர். மோனை எதுகை | /.தொடைசேர்த | /ளை. யின் வ. கை |
| /, பதாபமா கரிகப | /, கமாகரீ | /சச கமபத |
| /. ஆ.கும்பா வினம்சந்த | /. மா.விரிந் | /தது - வண்.ண. |
| / நிச் | | |
| /. . | | |

(சரணம்போல)

2. திணைபால் காட்டும் விகுதி சிறப்புப் பொதுப் பகுதி
சேர்ந்த விதங்க ளெல்லாம் தென்மொழிக்கே தகுதி
இணையெனும் வடமொழி இருமொழியுன் பேர்வழி
இசைக்கும் எழுதுவ தெல்லாம் வலஞ்சுழி – அதால்
(தமிழே)

3. அகரத்தோ டகரஞ்சேர் வடமொழித் தீர்க்கசந்தி
ஆகுமென்றுரைப் பார்கள் அறியார்கள் புத்திநந்தி
மகரவொற்றழிவிதி மார்க்க மென்பதைப் புந்தி
வைத்தார் மருஉ என்றாரே முந்தி – அதால்
(தமிழே)

4. கயற்கண்ணி மொழி பெயர்ப் பதற்கென உரைசெய்வார்
கந்தப் புராணமதின் காப்புச் செய்யுளறியார்
இயற்படப் புணரியல் என்றுடன் வாதாடுவார்
இசைமராடி என்பதற்கென் புகல்வார் – அதால்
(தமிழே)

5. வடமொழி வழக்கில்லை வழங்குவர் தமிழ்ச் சொல்லை
மலைவேங்கடங்குமரி மற்றிரு கடல் எல்லை
இடமாக வகுத்தவர் இன்றுள் ளார்களுமில்லை
இயம்பும் மீனாட்சி யென்ற பெயர்வல்லை – அதால்
(தமிழே)

குறிப்பு : இந்த இராகம் பேஹாக் என்றும் அழைக்கப்படுகிறது. இந்த இராகத்தின் அமரோசை சுரக்கோர்வைகளில் கைசிகி நிஷாதம், பிரதிமத்தியமம் ஆகிய இரு அன்னிய சுரங்களும் வருகின்றன.

## 9

இராகம் : தன்யாசி தாளம் : ஆதி

[8-ஆவது மேளகர்த்தா இராகமாகிய அனுமதோடியில் பிறந்தது.] /4 0 0

ஆரோசை : ச க ம ப நி ச்

அமரோசை : ச் நி த ப ம க ரி ச

### பல்லவி

/, ச்சா ச்சா ச்நிரிச் நிதபா

/. பெற்ற வள்கை விட்டுப். போனாள்

/, ம பா ம கா /கம பப

/. மற்றவள் நீ /யே மீனாட்சி

/, நீ ,தபா மகமக மப

/. பே . ணிவ ளர் த். திட். டா லும்

/மபதப மககரி /சா – பா

/என் ... .... /ன – என்னைப்

/, ப நீ ச் ரீ நீ ச் நி த ப

/. பெற்ற வள்கை விட்டுப். போனாள்

/, ம பா ம கா /க ம ப நி ச் ரி

/. மற்றவள் நீ /யே . மீ.னாட்சி

/, நி நீ த பா ம க ம க ம ப

/. பே.ணிவ ளர் த். திட். டா லும்

/ம ப த ப ம க க ரி /சா ;

/என் ... . . . . /ன .

**அனுபல்லவி**

/, ப பா ப பா ப நிச் நி த ப
/. சற்றுமவட் குத வா . த .
./, ப நீச் சா | / ச்ா ரி நி ச் ச்
/. தறுதலைப் | / பிள்ளை . யானேன்
/, ப பா ப பா பநி நிச் ரிச் நித
/. சற்றுமவட் கு . த . வா . த .
/ பம பநீச்சா | / ச்ாரிநி ச்ச்
/.. தறுதலைப் | / பிள்ளை . யானேன்
/, ப ச்ா ச்சா ச்நி ச்நி த ப
/. சமஸ்காரம் செய். வ. தற்கும்
/, மபாமகா | / க ம ப ப
/. கொடுத்துவைக் | / காதுபோனேன
/, பச்ரிச்ரீ நிநிச்ா பபநீ
/. சமஸ்.காரம் செய். வ தற்.கும்.
/, மபாமகா | / கம மப பநி நிச்
/. கொடுத்துவைக் | ./ கா. து.போ.னேன்.
/ ச்ரி
/. .

(சரணம் – பல்லவி, அனுபல்லவி போல)

என்னைக்கருத் தரித்திட்டபோது வருத்தமுற்ற விதத்தைக்
கணக்கிடலாமோ யாராலும் – தினம்
காலைமாலை மத்தியானவேளையும் பாலூட்டியென்னைக்
காப்பாற்றி நின்றாளே அன்பாலும்
பொருத்தமாக அதனைப்புகல எனக்கு வித்தை
போதுமோ தெரிகுவாய் இப்போது நீஅந்த

## 10

இராகம் : பரசு, தாளம் : ஆதி

(15 ஆவது மேளகர்த்தாவாகிய மாயாமாளவகௌளயில் பிறந்தது) / 4 0 0

ஆரோசை : ச க ா ம ப த நி ச்

அமரோசை : ச் நி த ப ம க ரி ச

### பல்லவி

| | | |
|---|---|---|
| /, சமாகமா தததரி | / ச்சா ; | /, ச்ரீச்சா , |
| / . நாடுமெனை யாளுவாய் பே | / ணி. | / . மதுரை. |
| /, ச்சாச்சாச் நிதபபா | / தம தாபமமா | / மகபம கரிசா |
| / . ராச் சியம்செ ழிக்கசெங்கோல் | / ஓச்சிடும்மீ | / னாட்.சி.ரா.ணி |

### அனுபல்லவி

| | | |
|---|---|---|
| /, ததாபதா தநிச்சா ரி ச் | /, ச்ச்சாரிச்சா | / ச்நிதா த ப |
| / . தோடுடைய னென்று முன்னம் | / . பாட வலி | / ஓர். பிள். ளைக்கு |
| /, ச்சாச்சாச் ச்நிநீ தபதா | / மா தபாமமா | / மகபம கரிசா |
| / . சுந்த ரிமு லைப். பா லீந். தாய் | / . தந்தாயோஏ | து.மெ.னக்.கு |
| /, பதாபாத பதாமா , மம | /, பதபமமப | / மககா மம |
| /. சொந்தமோ அன்.னான்.அயல் | / . வந்த.வனோ. | / நான்..மிகு |
| / மதபத மகபம கரிசா | // | |
| / துஷ்டப்பிள்ளை யா. னா. லென். ன | // | |

(சரணங்கள் அனுபல்லவி போலவே)

1. கண்ணொன்றில் வெண்ணெய்யும் மற்றக் கண்ணொன்றில்
சுண்ணாம்பும் பூச
எண்ணுவாரோ உலகத்தில் எல்லோரும் நிந்தித்துப் பேச
இச் செய்கைப் பேதம் – உரைக்கப் பட்சபாதம்
இங்கு ஏன் செய்தாய் நீதிக்குச் சேதம் (நா)

2. கூலிநீ கொடுத்த பின்னே வேலையவன் செய்தானன்றோ
ஏவும் வேலை செய்தேன் கூலி ஈயாமலிருத்தல் நன்றோ
இதுவுந் தர்மமோ என் – விதியின் கர்மமோ
சிறு ஏழை மீதிலேன் வர்மமோ (நா)

11

இராகம் : சுருட்டி தாளம் : ஆதி

(28 ஆவது மேளகர்த்தாவாகிய அரிகாம் போதியில் பிறந்தது)/ 4 0 0

ஆரோகை : ச ரி ம ப நி ச்

அமரோசை : ச் நி த ப ம க ப ம ரீ ச

பல்லவி

| | | |
|---|---|---|
| /, பநீதபா ம ம மகபம | /ரீ , ரி | /மாபா தநிச்ா |
| /. மதுரை நகர்க்கு வா.ருங். | /கள். மீ | /னாட்சி சே. வை |
| /, பச்ா நிதா ப ப மபதா | /பமரீ; | /ரிமசரீ, சா |
| /. மகிமையை நேரில் பா. ருங் | /கள். . . | /. . . . . . |

அனுபல்லவி

| | | |
|---|---|---|
| /, பச்ா நிதா ப ப ம ப | /, பநீதநீ | /ச் ச் ச் ச் |
| /. விதுவணிச் சடையவன் | /. விளையாடல் | /எட்டெட்டிட்ட |
| /, ததாததா நீ , நிச் ச் | /, பச்ா நிதா | /ப ம ப ச் |
| /. விரும்பியே மண். சுமந்து | /. பிரம்பினா | /லடிபட்ட |

(சரணங்கள் அனுபல்லவி போலவே)

அபிஷேகம் அலங்காரம் அருச்சனை தூபதீபம்
அமுது நைவேத்ய வகை அளவிலாப் பிரதாபம்
(மதுரை)

கொஞ்சமோ அணிபணி கூறமிகு ப்ரயாசம்
கொண்ட மூக்குத்தி ஒன்றே கோடி சூரிய ப்ரகாசம்
(மதுரை)

பார்த்தகண் பாதமன்றி வேற்றிடத்தில் மீளாது
பக்திச் சொல்லன்றிச் செவிமற்றைச் சொல்லைக் கேளாது
(மதுரை)

## 12

இராகம் : காம்போதி தாளம் : மிச்ரசாபு

(28-ஆவது மேளகர்த்தாவாகிய அரிகாம்போதியில் பிறந்தது.) / 3 0 0

ஆரோசை : ச ரி க ம ப த ச்

அமரோசை : ச் நி த ப ம க ரி ச

### பல்லவி

| | | |
|---|---|---|
| / ; பத - ச்நிநீ தா | / தா, - தா தப | / ; பப - தபதா |
| / . தா. யே.. மீ | / னாட்சி உன் . | / தன யன்.வே |
| / தபா - பதபத மா | / ; மக - பா தா | / ச்ச்ா - *நிபதா |
| / லனுக் கென்... மேல் | / . தய - வுசெய் | / யச்சொல் - லம் .. |
| / ச்ா ; ; , | // | |
| / மா . . . | // | |

### அனுபல்லவி

| | |
|---|---|
| / ; கம - பா, த | / ச்ா, - ர்ிக்ம்க் ர்ிர்ிர் |
| / . ஆ. யேன்.ப | / ல . க..லை. கள் .. |
| / ; ர்ிக்ாச்ா , ச்ா | / ச்நிர்ிர்ிச்ா - ச்நிதா நீபா |
| / . அறிவி . லேன் | / என்.... றா.. லும். |
| / ; தத - ர்ீ ச்ா | / நிதநிபா, பதச்ா |
| / . அதி - கக்கொ | / டு.மை . யா . ன |
| / ; பதர்ிச் நீ தா | / பா , - பதபத மா |
| / . அடஞ்செய்..து | / நின் . - றா ... லும் |

### சரணம்

| | |
|---|---|
| / ; ச்நி - நீதா | / தா த - தாபம |
| / . பெற். - றஅன் | / னைபி - தாவைப். |

| | |
|---|---|
| /; பத - பதா | / பபா - பதமா |
| /. பேதை - . யி | / ழந்து - விட்டேன் |
| /; நித - பாபா | / பபா - மகமா |
| /. பிரி - யநே | / சர்சுற் - றத். தால் |
| /; கம - பா தப | / பதச்நிரீ - தா நி. தபா |
| /. பெரு - மவஸ் | / தைகள்.. பட் டேன்.. |
| /; ம - காபா | / தச்ா - ரிரிரீ |
| /. குற் - றந்தி | / னம்பு - ரிந் து |
| /; ரிக்ாச்ா , ச்ா | / த ச்ா - ச்நிதா பா |
| /. குடி யால் . ம | / யங்கிக்-கெட்..டேன் |
| /; த - ரீச்ா | / நிதா - பதச்ா |
| /. கொஞ் - சமே | / னும்க - டைக்.கண் |
| /; நி-தா பப | / பா த - மாகா |
| /. கொள்-ளுங் காலைக் | / கும். பிட்டேன் |

(மற்ற சரணங்களும் இதுபோலவே)

2. அறிவில்லாப் பிராயத்தில் அவனுக்கடிமை யானேன்
அவன் வாழிடங்கள்தேடி ஆண்டியாகவும் போனேன்
முறியாக் கொண்டேனெனக்கு மோசங்களைச் செய்வானேன்
முறைபாடு கேட்டநீயும் முகம்பாரா திருப்பானேன். (தாயே)

3. பாட்டவனுக்கும் வேற்கும் மயிலுக்கும் பலபாடி
பழனித் தலத்திலே பாற்காவடி தூக்கியாடி
நாட்டம்நீர் உற்றொழுக நாளும் மெலிந்துவாடி
நானழுவதை நீயிந்நாளில் அவனுக்கோடி. (தாயே)

குறிப்பு : இந்த இராகத்தின் ச் நி ப த ச்ா என்ற சுரக்கோர்வையில் அன்னிய சுரமான காகலி நிஷாதம் இடம்பெறுகிறது.

13

இராகம் : தோடி
(8-ஆவது மேளகர்த்தா இராகம்)

தாளம் : ரூபகம்
0 / 4

ஆரோசை : ச ரி க ம ப த நி ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

பல்லவி

/ , சரி கா , கம
/ . தே. கம் . நிலை
/ பதாச்சா நீ , தபா
/ தீக்.கிரை காக்.கைநாய்

/ பாம காரி / சா ; பப
/ யுள்ள தல்ல / வே . வேகும்
/ தநீதபா மகாரிசா ; ; ;
/ வாய்க்.கிரை பேய்க்.கிரை

அனுபல்லவி

/ , தநி ச்ாரிச்
/ . சோ. கம் மோகம்
/ ச்ா , ரிச்ா நீ , தபா
/ சோர்ந் . தழிந் து . வீழ்ந்து

/ ச்ச் ச்நிதா நிச்
/ துன்பங்க.ளிற் பட்டுச்
/ நீ , தபா மகாரிசா
/ போ . கும் தட் டுக்.கெட்டு/

சரணம்

/ , பப பபாபாப
/ . உற்றார் உறவின்மு
/ தா பதாபமா கரிசா
/ . ஒன் றும் சொல்லார் ய.மன்
/ , பபா பதா தநிச்ா
/ . சற்றா கிலும் இன்.பம்
/ ச்ா,ச்ா நிநீதபா
/ தான்.கொள்வ தெல்.லாம்பே

/ பபபா பப பதநீ
/ றையார்.சந்தைக்கூட்டம்
/ சரிகம பப
/ வந்தால் கொள்வா ரோட்டம்
/ ச்ச் ச்நிதா நிச்
/ இல்லை யி.தில் நாட்டம்
/ நீ, தபா மகரிரிசா
/ ரா.சையாம் பே.யாட்டம்

(மற்ற சரணங்களும் இதேபோல)

பொங்கு மலசலம் பொல்லாப் புழுக்கூடு
யோசனவர்க்கத்தா ளாகிய மண்மேடு
தங்கும் பல பிணி சஞ்சரிக்கும் வீடு
சாரு முடிவினில் சேரும் சுடுகாடு (தேகம்)

ஆடையணி பணி யாகிய சிங்காரம்
ஆயிரம் செய்திருந்தாலும் என்ன சாரம்
பாடையினில் வைத்து ஊரார் ஆரவாரம்
பண்ணித் தூக்கும்போது பார்க்க மிகுகோரம் (தேகம்)

14

இராகம் : ஆரபி | தாளம் : ஆதி

[29-ஆவது மேளகர்த்தாவாகிய தீரசங்கராபரணத்தில் பிறந்தது] /4 0 0

ஆரோசை : ச ரி ம ப த ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

### பல்லவி

| | | |
|---|---|---|
| / ரீ , ம ரிச சசதச | / ரிரிமக ரீ | / , ரிரிச |
| / மேற் .குலத்து மாதா வாயோ | / சொல்.ல.டி | / . மீனாட்சி |
| / தரிச்ச் நிநிதப | / மபதப | / மபமக ரிசரீ |
| / வித்தாரம்நீ யுரைத்தாலும் | / தக்காது நல் | / ல. தல்.ல.டி |

### அனுபல்லவி

| | | |
|---|---|---|
| / தா , த தத ச்ச்ரிரி | / ரீ , ம் ரிச் | / ச்நிதப |
| / காற் . பது மந் தேடிவந்து | / கா . சி னியோர் | / பூசித்தாலும் |
| / த்ரிச்ரி ச்நிதப. | / மபதப | / மாமக ரிசரீ |
| / கண்டுபோற்றி இந்திராதி | / அண்டர் புகழ் | / வாசித்.தா.லும் |

### சரணம்

| | | |
|---|---|---|
| / தா , த தத தததத | / தா , த தத | / தத பப |
| / ஆட்டிடையன் அண்ணன் நாதன் | / கோட் . டி கொண்டிட் | / டவலையன் |
| / மா ,ப தப மக கரிரீ | / சாபம பதாப | / ; தத |
| / ஆ .சை மக னும்குறவ | / னல்ல. வோ.. | / . உன் றன் |
| / த்ரிச்ரி ச்நிதப | / மபதப | / மமகரி |
| / அந்தரங்க மர்மமான | / நிந்தைபழி | / நானறிவேன் |
| / ரிரிரிரி ரிரிசரி | / ரிரிமக ரீ | / ; ; |
| / அத்தனையும் இங்கெடுத்துச் | / சொல்.ல.வோ | / . . |
| / தா , த தத ச்சா , ச் | / ரீ , ம் ரிச் | / நிநிதப |
| / கேட்டிடில்ஊரார் . சிரிக்க | / கே . வ லங்கள் | / விஸ்தரிக்க |
| / தா , ரி ச்ரி ச்நிதப | / மபாதபா மா | / மாமக ரிசரீ |
| / நாட்டிடும்உ பசரிக்க | / நான்.பாடி உன் | / னை.. ஸ்மரிக்க |

15

இராகம் : நாதநாமக்கிரியை தாளம் : ஆதி

[15-ஆவது மேளகர்த்தாவாகிய மாயாமாளவகௌளயில் பிறந்தது] /4 0 0

ஆரோசை : ச ரி க ம ப த நி
அமரோசை : நி த ப ம க ரி ச நி

பல்லவி

/ சரீமா , மா கா , ரி சா / சா , ரி சச / சா ,ரி சச
/ சங் . கீ . த சா . ரமே / சாற் . றவும் அ / பா .ர மாமே

சரணம்

/ கதபத பதபத பதபத பதபத
/ ஜதிசுதி லயவகை மனமதை ஒருநிலை

/ பதபம கமபத / பா - பப
/ தனிலுற வலிநாட் / டும் - மதி

/ மபதப மகமத பா - பம
/ தருநிஜ மதுகாட். டும் - சிவ

/ மபதப மகமத / பா - பப
/ தலமதில் அருட்கூட் / டும் - ஒரு

/ பதபம கரி கரிசா / பதபம / கரி கரிசா
/ சஞ்சலமில்லாம லோட்.டும் / சஞ்சலமில் / லாம லோட்.டும்

(மற்ற சரணமும் இதேபோல)

பிறவியெனும் அரிய பிணி விலகிடயிது
பெரிய அமிழ்தமாகும்—வந்து
பெருகிய வினைபோகும்—செய்த
பிழை விலகியு மேகும்—ஆசைப்
பித்த மென்னும் காடு வேகும் (சங்)

16

இராகம் : குறிஞ்சி                                                  தாளம் : ஆதி

[29-ஆவது மேளகர்த்தாவாகிய தீரசங்கராபரணத்தில் பிறந்தது]         / 4 0 0

ஆரோசை : ச நி ச ரி க ம ப த

அமரோசை : த ப ம க ரி ச நி ச

பல்லவி

| | | |
|---|---|---|
| / பா , ம கமகரி | / சரிசநி | / பா—சச |
| / மீ . ன் லோசனி | / தா.யே | / . உன்னை |
| / ரீ , ரி கமகரி | / சரிசா | / ; ; |
| / வேண் . டி னே.னருள் | / வா.யே | / . . |

சரணம்

| | | |
|---|---|---|
| / மபமக கமகரி | / கமபம | / பாபா |
| / நா.னுன்னை மறவேன் என் | / னா.ளுமுன் | /பா தம் |
| / கமபம கமபப | / மபமக | / ரிசரிக |
| / நலமுட னிதுதநி | / கொடுபிர | / சா. தம். |

(மற்ற சரணங்களும் இதேபோல)

முத்தொழில்கள் நடத்தும் மூர்த்திகள் துதிக்கும்
முக்கோண யந்திரங்கள் நிற்கச் சம்மதிக்கும்
ஐந்து வீட்டுக் குள்ளான ஐம்பத்தோ ரெழுத்து
அலை விபரங்களை நான் அறியநீ வழுத்து (மீன)

17

இராகம் : அடாணா தாளம் : ரூபகம்

[29-ஆவது மேளகர்த்தாவாகிய தீரசங்கராபரணத்தில் பிறந்தது.] 0 / 4

ஆரோசை : ச ரி ம ப நி ச்

அமரோசை : ச் நி தா ப ம ப கா ரி ச

பல்லவி

| | |
|---|---|
| / ச்நிதா பம | / பா , ம காமா , தபா |
| / முருகன் திரு | / மால் . ம ருகன் . பெரு |
| / தா ; ச்ச் | / ச்ரிச்ச்ச் ச்நி |
| / மை . அந்த | / முக்கண்ணனுக்கு மில் |
| / தா தநீபமாபரி | // |
| / லை - கழுகா . சல | // |

அனுபல்லவி

| | |
|---|---|
| / , ச்ரி ரீ ரி ரி | / ச் ச்நிபா நி ச்ச் |
| / . இரு கா லும் ம | / ன தி.வ னைக் கண்டால் |
| / பபரீச்ச் பபநீபப | / பதநீபம பநிபமபரி |
| / இளகும்படி களிபொங்கிட | / வளமிஞ்சிய கழுகா.சல |

சரணம்

| | |
|---|---|
| / , பா , கமா பப | / பதாநிநீ பம பா |
| / . கார் . த்திகைப் பெண்கள் | / அருமை பெருமை கண்டு |
| / பபாரி ச்ச் ச்நிநீ | / தா ; ச்ச் |
| / களிக்க வரும் பா.. | / லன் . அதிற் |
| / ச்ரிச் நி ச்ச் | / பத நி ப ம ம |
| / காணும் கிர வுஞ்ச | / மாமலையை வேறு |

/, ம ம ம மா / மாபத மகரீ ரீ
/. கண்ட வ டி / வே.. லன்.. .
/, ச்ாச்ச் ர்ிர்ிர்ி / ச்ரி ச்நிச்ச்
/. ஆர்த்தஅ சுரரை / அன்று கொல்லும் வேலன
/, ச்ரச்ச் ர்ிர்ிர்ி / ச்ரிச்நிச்ச்
/. ஆடும் மயில் மீது / ஆரோ கணக் கோலன்
/, ச்ாச்ச் ர்ிர்ிர்ி / த்ரிச்நிச்ச்
/. கோர்த்தக டம்பம / லரணியும் சீலன்
/ பபரீச்ச் தநிச்ாச்ச் / பதநீபம பநிபாபரி
/ குகனென்றவர் சுகமுற்றிட / புவனத்திடை புகழ்பெற்றிட

(மற்ற சரணமும் இதேபோல)

குட்டிப் பிரமனை முன் சிறையிட்டவன்
கோகனகப் பாதம் – ஒரு
குற்றமில்லாத சிவனுக்குபதேசம் செய்த குருநாதன்
எட்டுத் திசையும் புகழும் நந்நீதன்
ஏந்திழை வள்ளி மகிழும் மணவாளன்
மட்டிலடாணாராகப்ரிய சங்கிதன்
மதுரத் தமிழ் முனிவர்க்கருள்சிவ சுப்பிரமணியப் பெயர்

(முருகன்)

## 18

இராகம் : செஞ்சுருட்டி — தாளம் : ரூபகம்

[28-ஆவது மேளகர்த்தாவாகிய அரிகாம்போதியில் பிறந்தது.] — 0 / 4

ஆரோசை : த ச ரி க ம ப த நி
அமரோசை : த ப ம க ரி ச நி த பு

### பல்லவி

| | |
|---|---|
| /, சசாச சநிதா நி | / சா , சரிகாரீ |
| /. கடைக்கண் பா.ரம் | / மா . அம் . மா |

### அனுபல்லவி

| | |
|---|---|
| /, சரிகாரீ ரிரி | /, தநீச சநிதநிபா |
| /. கதியுன்னை யல் லால் | /. கருதில் யா.ரம் . மா |

### சரணம்

| | |
|---|---|
| /, ரிகாசசா சரி | / கமகா கக |
| /. அடைக்கலம் உனக் | / கல்லவோ-என் றன் |
| /, மமாமமா மம | / காமா கரிரீ ; |
| /. அவஸ்தையை இன்னும் | / சொல்ல வோ . . . |
| / மகம பபப | / ; ; பமகா |
| / நடைக்குள் செல்லவோ | / . . தீ . ய |
| / மகம பபப | / ; ; பப |
| / நடைக்குள் செல்ல வோ | / . . எமன் |
| / பதாப மககா | / கபாமகா ரிசரி |
| / நா.டி லுன் பிள்ளை | / வா.யை. மெல்லவோ |

(மற்ற சரணங்களும் இதுபோலவே)

உத்தம நெறியுற்றிலேன் நாளும்
ஓதியுன் புகழ் கற்றிலேன்
பத்மமும் பற்றிலேன் பாதபத்மமும் பற்றிலேன்
பாரிலோர் துணை ஏது பெற்றிலேன் (கடை)

விருதுகொள் புஷ்ப பாணியே—வேத
வித்வ சாகரத் தோணியே
கருது வேணியே- என்னைக் கருது பேணியே
நல்ல கயற்கண்ணி யென்னு மதுரை ராணியே (கடை)

குறிப்பு : செஞ்சுருட்டி இராகத்தில் சாதாரண காந்தாரம் எப்பொழுதாவது பயன்படுத்தப்படுகிறது-

19

இராகம் : பியாக் தாளம் : ஆதி (திச்ரகதி) [400

[29-ஆவது மேளகர்த்தாவாகிய தீரசங்கராபரணத்தில் பிறந்தது.]

ஆரோசை : ச க ம ப நி த ச்
அமரோசை : ச் நி த ப ம க ரி ச

பல்லவி

| | | |
|---|---|---|
| / சாச காம பா ;; | / பா த பாம | / கா ;; |
| / மீன லோச னி .. | / பா த மேக | / தி .. |
| / பா த பாம கா கரீக | / காம காரி | / சா ;; |
| / மேவு ம வ ளே மதுரை | / யாள தி ப | / தி .. |
| / ச்ாச் ச்ா நி தா ;; | / தா த நீத | / பா ;; |
| / வித்தை யா முல .. | / கத்தி லே சொ | / ல .. |
| / பா த பாம கா ;; | / பாப மாப | / மாகசாச |
| / வித்தை யோ ப ல .. | / வேத நாலு | / மோதினாலும் |

(சரணங்களும் இதுபோலவே)

ஞானசா தனம் மோனமாமென
நாடியுரை யாடி மறை நாளுமோ தின
நந்தணிந்தவன்
முந்து மந்தணன்
உம்பர்க் கிந்திரன்
நாடு சொக்கநா தர் பக்கம் (மீன)

சாஸ்திரவா தம் எல்லாம் சூஸ்திர பே தம்
தாரணி வாழ்வோரை காணும் விேனா தம்
தர்க்க மேதுக்கு
மிக்க தீதுக்கு
தத்வ மே துக்கு
சாட்சிச் சொல்ல காட்சி நல்கும் (மீன)

குறிப்பு : இந்த இராகம் பேஹாக் என்றும் அழைக்கப்படுகிறது. இந்த இராகத்தின் அமரோசை சுரக்கோர்வைகளில் கைசிகி நிஷாதம், பிரதி மத்தியமம் ஆகிய இரு அன்னிய சுரங்களும் வருகின்றன.

